# மனிதனின் சேரும் இலக்கு

டாக்டர் அலெக்ஸில் கேரல் ப்ரான்ஸில் 1873ம் ஆண்டு பிறந்தவர். மருத்துவத்துறையில் பட்டம் பெற்ற பிறகு 1905ம் ஆண்டு அமெரிக்காவின் நியுயார்க்கில் இருக்கும் ராக்ஃபெல்லர் இன்ஸ்டிடியுட்டில் மருத்துவ ஆராய்ச்சி யாளராக பணியில் சேர்ந்து முப்பது ஆண்டுகாலம் பணியாற்றினார். மருத்துவத் துறையில் அவர் ஆற்றிய அரும்பணிக்காக 1912ம் ஆண்டு அவருக்கு நோபல் பரிசும் வழங்கப்பட்டது. பிறகு 1944 ஆண்டு ப்ரான்ஸில் மரணம் அடைந்தார்.

அவர் எழுதிய (Man the Unknown) அறியப்படாத மனிதன்) என்ற நூல் 1935ம் ஆண்டு வெளியிடப்பட்டு பல முறை மறுபதிப்பும் செய்யப்பட்டது. அந்த நூலைப் பற்றி கூறும் போது விமர்சகர் ஒருவர், இந்த நூல் மனிதனின் வாழ்வையும் முழு அனுபவங்களையும் விஞ்ஞானத்தின் கோணத்தில் முழுமையான முறையில் விவரிக்கின்றது“ என்று கூறியிருந்தார்.

ஆனால் அந்த 312 பக்க நூலில் டாக்டர் அலெக்சிஸ் காரல் அவர்கள் மனித வாழ்க்கையின் உண்மைநிலையை கண்டறிய தவறி விட்டார். அதனால் தான் அவர் தனது நூலுக்கு (Man the Unknown) என்று பெயரிட்டிருக்கிறார். அவரது நூல் நமக்கு கூற முன்வருவது என்னவென்றால் மனிதனை விஞ் ஞான அம்சத்துடன் பார்க்கும் போது அவன் டாக்டர் காரெல் அவர்களால் “கண்டறியப்பட்டவன்“ என்றே கூறப்படுகின்றான். பிறகு ஏன் அவர் தனது நூலுக்கு இவ்வாறு பெயரிட்டார் என்ற கேள்வியும் எழுகின்றது. அவர் மனிதனை கண்டறிந்திருந்தாலும் அவரது ஆய்வு மனிதனின் சேருமிலக்கைப் பற்றி எவ்வித கருத்தையும் முன் வைக்கவில்லை என்பதால் இந்த குழப்பம் தோன்றுகின்றது. அறியப்பட்ட மனிதன் அறியப்படாத இலக்கை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கின்றான் என்று அவர் கருதியிருக்கலாம்.

> உண்மை என்னவென்றால், மனிதன் அறியப்பட்டவனாக இருந்தாலும், மனிதனின் சேருமிடம் பற்றிய நிச்சயமின்மை இருந்துக் கொண்டே இருக்கிறது.

உண்மை என்னவென்றால் அறியப்படாமல் இருப்பது மனிதன் அல்ல, மாறாக அவன் சேரும் இலக்கு. அவர் தனது நூலுக்கு Man’s Destination, The Unknown அதாவது மனிதனின் சேருமிலக்கு அறியப்படாதது என்று பெயரிட்டிருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும்.

இது டாக்டர் காரெல் அவர்கள் மட்டும் சந்தித்த பிரச்சனையல்ல. எல்லா சிந்தனையாளர்கள் மற்றும் தத்துவவியலாளர்களின் விஷயத்திலும் இது தான் உண்மை. மனிதன் என்பவன் அறியப்பட்ட ஒருவனாக அவர்களுக்கு தெரிந்திருந்தாலும் அவர்களது சேருமிலக்கைப் பற்றி எவ்வித அனுமானம் கூட இல்லாதவர்களாகவே இருந்திருக்கின்றனர். மனிதனுக்கும் அவன் இறுதியாக சேரும் இடத்திற்கும் மத்தியிலான இந்தச் சிந்தனை சார்ந்த இடைவெளி இறைவனை சென்றடையும் பாதை மனிதனுக்கு எந்த அளவிற்கு புதிரானதாக இருக்கின்றது என்பதையே காட்டுகின்றது.

அதன் விளைவாக இறுதியில் பேரழிவைத் தவிர வேறொன்றும் கிடைக்கப் போவதில்லை. மனிதன் பிறப்பின் போதே முழுமையானவன். சிறிதும் குறைகள் அற்றவன். அவன் ஒரு தடையற்ற, எல்லையற்ற இன்பத்தை அளிக்க கூடிய, ஒரு நிரந்தரமான வாழ்க்கையை விரும்புகின்றான்.

> மனிதன் படைக்கப்பட்டவன், படைப்பாளி அல்ல; எவ்வாறு இயந்திரங்கள் பொறியியல் வல்லுனரால் வடிவமைக்கப்படுகிறதோ அப்படி, எது ஒன்றும் தன்னை தானே உருவாக்கி கொள்வதில்லை

மனிதன் தனது கற்பனைகள் நிஜமாகக் கூடிய உலகத்தை எதிர்பார்க்கின்றான். எல்லா முரண்பாடுகளுக்கும் அப்பாற்பட்ட உலகத்தை எதிர்பார்க்கின்றான். முழுமையான திருப்தியோடு வாழ்க்கை நடத்துவதற்குத் தகுதியான உலகத்தை எதிர்பார்க்கின்றான். அவன் ஒரு துல்லியமான உலகத்தை எதிர்பார்க்கின்றான். ஆனால் அவன் இவ்வுலகத்தில் எவ்வளவு தான் முயற்சி செய்திருந்தாலும் அவனால் தான் விரும்பிய துல்லியமான உலகத்தை ஏற்படுத்திக் கொள்ள முடிவதில்லை.

## இந்த முரண்பாட்டை எவ்வாறு விவரிப்பது?

மனிதன் படைக்கப்பட்டவன். அவன் படைப்பாளன் அல்லன். எவ்வாறு ஒரு இயந்திரம் பொறியியல் வல்லுனரால் வடிவமைக்கப்படுகிறதோ அவ்வாறு. எதுவும் தானாகவே தன்னை உருவாக்கிக் கொள்வதில்லை. ஆக மனித இயல்பை புரிந்து கொள்ள இறைவனின் படைப்பு திட்டம் பற்றிய புரிதல் அவசியம். பொறியியல் வல்லுனரின் படைப்பு நோக்கத்தை அறிந்து கொள்ள முடியாமல் அவர் படைத்த பொருள் பயன்படுத்த முடியாமல் போகும். அதே போல் தான் கடவுளை பற்றிய நம் தேடலும், அதன் மூலமாக நாம் மனிதனை முழுமையாக அறிந்து கொள்ளவே முடியாது. ஆகவே தான் படைப்பு திட்ட பார்வையில்லாமல் மனித வாழ்வின் பொருளை புரிந்து கொள்ள முடிவதில்லை. இறைவனின் படைப்பு நோக்கத்தின் பார்வையில் இல்லாமல் மனித வாழ்வின் பொருளையும் அறிவதில் நாம் தவறி விடுவோம். அதே சமயம் படைப்பு திட்டம் நமக்கு தெளிவாகும் போது மற்ற அனைத்தின் உள்ளடக்கமும் வெளிச்சம் பெறும். எல்லாம் அதனதன் இடத்தில் பொருந்திப் போகும்.

## இறைவனின் படைப்புத் திட்டம் என்ன?

இவ்வுலகத்தில் இருக்கும் அனைத்து படைப்புகளைப் போலவும் உலகத்தையும் இறைவன் ஜோடியாகவே படைத் திருக்கின்றான். இவ்வுலகத்தில் நமது பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்க்கை முதல் பகுதியாகவும் மரணத்திற்கு பிறகு வாழப் போகும் மறுமை வாழ்க்கை இரண்டாவது பகுதியாகவும் இருக் கின்றது. மனிதனின் படைப்பாளன் மனிதனை ஒரு நிரந்தர படைப் பாக படைத்து அவனது வாழ்க்கையை மரணத்திற்கு முந்தைய பாகம் பிந்தைய பாகம் என்ற அடிப்படையில் இரண்டாக பிரித்து அமைத்து விட்டான். மரணத்துக்கு முன்பு உள்ள வாழ்க்கை சோதனைக் களமாகவும் அதில் அடையும் வெற்றியும் தோல்வியும் பிந்தைய வாழ்க்கையில் பரிசாகவோ, தண்டனையாகவோ அமையப் போகிறது. தத்துவஞானிகளும் சிந்தனையாளர்களும் இப்பொழுது இருக்கும் இந்த உலகம் தான் மனிதனின் இறுதி வசிப்பிடம் என்று தவறாக கருதி கொள்கின்றனர்.

மறுமை உண்டு என்பதை அவர்கள் புரிந்து கொள்வதில் தவறு செய்து விட்டனர். நாம் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த உலகம் நமக்கான சோதனைக் களமாக இருப்பதால் நமது சொல், செயல், சிந்தனையை நாமே தீர்மானிப்பதற்கான முழுச் சுதந்திரமும் நமக்கு கொடுக்கப்பட்டிருக்கின்றது.

இந்த உலகமானது எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ள தேர்வு அறையாக அமைந்திருக்கின்றது. ஆனால் கற்பனையில் தோன்றும் மிக மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்வதற்கு தேவையான அம்சங்கள் இவ்வுலகத்தில் எங்குமே இல்லை. இங்கிருக்கும் அனைத்தும் அரை குறையான அம்சங்கள் மட்டுமே. மனிதன் தனது கற்பனையான வாழ்க்கையை இவ்வுலகத்தில் தேட முயற்சிப்பது மாணவன் தனது தேர்வு அறையிலேயே அதிகாரிக்கு கிடைக்கும் மரியாதையை பெற முயற்சிப்பது போன்றதாகும். மேற்குறிப்பிட்ட இந்த மாணவனைப் போன்று மனிதனும் தனது கற்பனைகளையெல்லாம் இவ்வுலகத்திலேயே பெற்று விட வேண்டுமென்று முயற்சித்தால் தோல்வியும் விரக்தியும் மட்டுமே மிஞ்சும்.

> நமக்கு கொடுக்கப் பட்டிருக்கும் சுதந்திரத்தை இறை விருப்பத்திற்கேற்ப பயன்படுத்த வேண்டும்

### இந்த உலகில் நாம் எவ்வாறு வாழ வேண்டும்?

மரணத்திற்கு பிந்தைய அந்த வாழ்க்கையை பெறுவதற்கு இவ்வுலகத்தில் என்ன ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்ற கேள்வி அனைவரின் உள்ளங்களிலும் இயல்பான ஒன்றாகும். இதற்கான பதில், அவர்கள் தனது சுதந்திரத்தை படைப்பாளனின் விருப்பத்திற்கேற்ப பயன்படுத்த வேண்டும் என்பதே. நாம்

இதை எவ்வாறு செய்யலாம்? நாம் நம்மை மனப்பூர்வமாக இறைவனுக்கு முன் சமர்ப்பித்து விடுவதால் இதைச் செய்வது மிகவும் எளிதானதாக ஆகி விடும். நமக்கு கிடைத்திருக்கும் முழுச் சுதந்திரத்தையும் நமது மனோ இச்சையின்படி செலவு செய்து விடுவதற்கு பதிலாக நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொண்டு ஒரு நேர்மறையான தோற்றத்தை உருவாக்கி கொண்டு எதிர் மறையான சூழ்நிலைகளில் நேர்மறையாக நடந்து கொண்டு நாம் எவ்வாறு நடத்தப்பட வேண்டுமென்று நினைப்போமோ அதுப் போன்றே மற்றவர்களிடமும் நாம் நடந்து கொள்ள வேண்டும்.

## நமது பரிசு எதுவாக இருக்கும்?

மரணத்திற்கு முந்தைய இவ்வுலக வாழ்க்கையில் இறைவனின் கட்டளைக்கிணங்க தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் மக்களுக்கு மரணத்திற்கு பிந்தைய வாழ்க்கையில் இறைவன் சுவனம் எனும் உலகத்தை ஆயத்தப்படுத்தி வைத்திருக்கின்றான். அது மனிதனின் ஆசைகளையும் கனவுகளையும் முழுமைப் படுத்தும் வகையில் படைக்கப்பட்டிருக்கின்றது.

அது ஒவ்வொரு வகையிலும் நமது கற்பனைகளுக்கேற்றவாறு அமைந்திருக்கின்றது. அங்கு விரக்தியில்லை, பிரச்சனைகள் இல்லை, நோயுமில்லை, முதுமையுமில்லை, அங்கு எப்பொழுதும் அமைதி, இன்பம், மகிழ்ச்சி ஆகியவை மட்டுமே நிறைந்திருக்கும்.

> மரணத்திற்கு பிந்தைய வாழ்க்கையில் சுவர்க்கம் எனும் பரிபூர்ண உலகை உருவாக்கி வைத்துள்ளான். அது மனித இயல்பின் அனைத்து ஆசைகளையும் நிறைவேற்றி வைக்கும்

எவர்கள் இவ்வுலக வாழ்வில் இறைவனுக்கு முற்றிலும் அடிபணிந்து வாழ்கின்றார்களோ அவர்களுக்காகவே அந்த சுவனத்தை படைத்துள்ளான். அதற்கான தகுதித் தேர்வு மையமே இவ்வுலக வாழ்க்கையாகும்.

## சரி! இறைவனின் இந்தப் பரிசிற்கு தகுதியானவர்கள் யாராக இருப்பார்கள்?

இறைவனை புரிந்து கொள்ள தமது அறிவுணர்ச்சியை பயன்படுத்தியவர்கள் ஆவார்கள். மனக்கவலையின் அழுகை வேர்களை பிரித்து போடும் முகமூடியை வீசி எறிந்தவர்களே இறைவனின் உண்மையை கண்டவர்கள். யார் எல்லாம் பல தெய்வ வழிபாடுகளை கைவிட்டு உண்மையான ஒரே இறைவனுக்கு அடிபணிந்து கட்டுப்பாடு காத்தார்களோ அவர்கள். எவர் தனக்கு கிடைத்துள்ள அறிவுத்திறனைப் பயன்படுத்தி உண்மையான இறைவனை அறிந்து கொண்டாரோ அவரே அங்கு வாழ்வதற்கான தகுதி பெற்றவர் ஆவார். எவர் தனது மனதில் உள்ள குழப்பமெனும் திரையை போக்கி எல்லா வகையான வழிபாடுகளையும் கைவிட்டு ஓரிறை வழிபாட்டை ஏற்றுக் கொண்டு அந்த இறைவனின் கட்டளையின் படி பண்பான வாழ்க்கை வாழ்கின்றாரோ அவர்களே அங்கு வசிப்பதற்கு தகுதி பெற்றவர்களாவர். இந்த ஆன்மிக நிலைக்கு தங்களை உயர்த்திக் கொண்டவர்கள் முடிவில்லா இன்பம் தரக்கூடிய சுவனத்தில் குடியேறுவர்.

எவர் இறைவனின் விவகாரத்தை அலட்சியப்படுத்தி தாங்கள் வணங்குவது இறைவனா இல்லையா என்பதைப் பற்றி கவலைப்படாமல் இறைவனின் விவகாரத்தில் தங்களது மனப்போக்கிற்கு இணங்க செயல்பட்டார்களோ அவர்கள் முடிவில்லா வேதனை தரக்கூடிய நரகத்தில் குடியேறுவர். அங்கு அவர்கள் துன்பமும் வேதனையும் தவிர வேறொன்றையும் காண மாட்டார்கள். சொர்க்கம் செல்லும் பேறு பெற்றவர்கள் இந்த உலகில் நற்செயல் ஆற்ற வேண்டும். மற்றவர்கள் நரகத்தில் உழல்வார்கள். அது சந்தேகமின்றி “வாய்ப்புகளை தவற விட்டவர்கள்“ இடமாகும்.

எனவே உங்களுக்கு கிடைத்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தை சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளுங்கள். உங்களுக்கு கிடைத்த சந்தர்ப்பத்தை சரியாக பயன்படுத்திக் கொண்டீர்கள் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்; அதை வைத்தே மறுமை உலகத்தின் மகிழ்ச்சியும் துன்பமும் அமைந்திருக்கிறது

இறைவனின் பேரருள்களில் ஒன்றாக இருக்கும் அந்தச் சுவனம் தான் மனிதனின் சேருமிலக்கு. அங்கு வசிக்க இருப்பவர்களின் மீது இறைவனின் அருள் உண்டாவதாகஞ். இறைவன் உங்களுக்கு அந்தப் பாதையை திறந்து வைப்பானாக.

**- மவுலானா வஹிதுத்தீன் கான்**


For more information, contact :

TL 09

GOODWORD

324, Triplicane High Road,
Chennai - 600 005.
☎ +91-44-4352 4599
+91 97908 53944
✉ chennaigoodword@gmail.com

goodwordbooks.com

1, Nizamuddin West Market,
New Delhi - 110 013.
✉ info@goodwordbooks.com

www.alquranmission.org • www.wkhan.net
www.alrisala.org • www.cpsglobal.org

CPS International centre for peace & spirituality


